# ஆங்கிலியர் அந்தாதி



வண்ணச்சரபம்

## தண்டபாணி சுவாமிகள்



உ

குருவே துணை

# ஆங்கிலியரந்தாதி

நூலாசிரியர் :
மகான் வண்ணச் சரபம்
திருப்புகழ்ச் சுவாமிகள், முருகதாச சுவாமிகள்
என வழங்கும்
அருள்மிகு தண்டபாணி சுவாமிகள்
திருவாமாத்தூர்

உரூபா 2-50 -

பதிப்பாளர் :
ஓவியப் பாவலர் - புலவர் மு. வலவன் (மு. பா. சாரதி)
குண்டையார்தண்டலம் வே. தட்சிணாமூர்த்தி

வெளியீடு :
முத்தமிழ் அருள்நெறி மன்றம்
65, பெரிய தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை - 600 005.
1985

# முன்னுரை

இன்றைக்கு 146 ஆண்டுகளுக்குமுன் திருநெல்வேலியில் முருகப் பெருமான் திருவருளால் தோன்றியவர், மகான் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் ஆவார். முருகனருளால் கவிபாடும் ஆற்றல் கைவரப் பெற்ற இவர், சர்வதாரணி எனும் எழுத்தாணியின் மூலம் பனையோலைச் சுவடியில் படைத்த பாடல்கள் பல. கோவை, அந்தாதி, யமகம், திரிபு, சிந்து இப்படிப் பல்வேறு நூல்களைப் பல்வேறு யாப்பு களில் படைத்துள்ள இவரின் பழுத்த தமிழ்ப்புலமை நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது. 'வண்ணம்' என்ற சந்தப் பா பாடுவதில் வல்லமை பெற்றவராதலின் 'வண்ணச் சரபம்' என்றும் அருணகிரிநாதரின் அடியொட்டித் திருப்புகழ் பல படைத்தமையின் 'திருப்புகழ்ச் சுவாமிகள்' என்றும் அரையிற் கௌபீனமும் கரத்தில் தண்டமும் கொண்டிருத்தலின் 'தண்டபாணி சுவாமிகள்' என்றும் அழைக்கப் பட்டார்.

முருகனையே சிறப்பாக வழிபடும் கௌமார சமயத்தினர் இவர் எனினும் சமரசக் கொள்கையுடன், திருவரங்கத் திருவாயிரம், சடகோபர் சதகத்தந்தாதி, பெருமாளந்தாதி, திருமகளந்தாதி போன்ற நூல்களையும் படைத்துள்ளார். தோத்திர நூல்களாக அறுசமயக் கடவுள்கட்கு ஆயிரமாக ஆறுயிரம் பாடல்களையும், புலவர் புராணம், திருவாமாத்தூர்த் தலபுராணம், அருணகிரிநாதர் புராணம் போன்ற வரலாற்று நூல்களையும் அறுவகை இலக்கணம், ஏழாம் இலக்கணம், வண்ணத்தியல்பு போன்ற இலக்கண நூல்களையும், முசுகுந்த நாடகம் என்ற நாடக நூலையும், கௌமார முறைமை, தியானுநுபூதி போன்ற சாத்திர நூல்களையும், மறுநெறித் திருநூல, நான்கு நூல் போன்ற நீதிநூல்களையும், சத்திய வாசகம் என்ற உரை நடை நூலையும் படைத்துள்ள இவரின் தனிச்சிறப்பு யாதெனில் 'ஆங்கிலியர் அந்தாதி' என்ற சமுதாய நூலைப் படைத்துள்ளமையே ஆகும். இவரது சமகாலத்துப் புலவர்கள் செய்யாத ஒன்றைத் துணிந்து செய்துள்ள இவரின் புரட்சி நெஞ்சம் போற்றற்குரியது.

ஆவினத்தைத் தெய்வமாகவும் திருமாலின் அம்சமென்றும் போற்றுவது இந்த சமயக் கொள்கை ஆகும். இக்கொள்கையினையே தலையாய கொள்கையெனக் கொண்டு வாழ்ந்தவர் தண்டபாணி சுவாமிகள் என்பது,

"ஆவை மாலெனப் புரந்தருள் வேட்ட என்
பாவை" (ஞாயிறு ஆயிரம்) எனுமடிகள் நன்குணர்த்தும்.

பசுவினைக் கன்றுடன் கொன்றுதினும் ஆங்கிலியர் ஆட்சி இந்தியாவில் நடைபெற்ற காலத்தில் சுவாமிகளின் அருளுள்ளம் கொதித்தது. பெரும்பாலும் ஆன்மீகத் துறையிலிருப்போர் அரசியல் பேசுவதில்லை.

"நாயார்க்குங் குடியல்லோம் நமனையஞ்சோம்" என்று சமண ராட்சியை எதிர்த்து முழங்கிய வீரத்துறவியான அப்பர் சுவாமிகளின் வழித்தோன்றலான வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளும் ஆங்கிலியராட்சிக் கெதிராக முழங்கியுள்ள முழக்கங்களை அவரது அனைத்து நூல்களிலும் ஆங்காங்கே காணலாம்.

"நிரைபடப் பசுவனந் தந்தினம் கொன்றுதினும்
நீசர் குடைநிழலில் வெம்பித்
தரைமகள் அழும்துயர் சகிக்கறிகிலேன்; மனச்
சாட்சி யன்றியுண்டோ?" (திருத்தணிகைப் பதிகம்)

வெள்ளையராட்சியைக் 'கொடுங்கோலென்றும்' அவர் குடையைக் 'கருங்குடை' என்றும் அவர்களை இழிந்த பேய் போன்றவர் எனுங் கருத்துடன் 'குணுங்கர்' எனும் சொல்லால் இழித்தும் பழித்தும் கூறிக்கின்றார்.

"நாய்ச் சிறுவாலே யனைய குணுங்கர்"

"புலை வெண் குணுங்கர்"

"வீணுரையாடிடும் வெண் குணுங்கர்"

"எமன் ஒக்கும் ஆங்கிலியர்"

"எல்லாம் கொன்றுண்ணும் குணுங்கர்"

"மானம் அணுவளவேனும் இலாக் கொடுவஞ்சகர்"

"புல்லறிவாண்மை பொலி ஆங்கிலியர்"

"திருட்டுத் தன்மை கைவந்த ஆங்கிலியர்"

இவ்வாறு ஆங்கிலேயரைச் சாடுகின்ற சுவாமிகள் ஆங்கிலியர் ஆட்சியை அகற்றும் வல்லமை படைத்த தலைவன் ஒருவனை, வீரனை, சித்தனைப் படைத்துத் தருமாறு இறைவனிடம் வேண்டுகின்றார். ஆங்கிலியர் ஆட்சியால் விளைந்த கேடுகள் ஆங்காங்கே சுட்டப் படுகின்றன. செந்தமிழ்ப் பயிற்சி மறைந்து ஆங்கில மொழி மோகம் மக்களுக்கு ஏற்பட்டது. இதனால் செந்தமிழ்ப் புலவர்கள் வாடுகின்றனர் என,

"கன்னி நன் நாட்டில் பிறந்தாரும் ஈனக்கலை பயில
இன்னிசைச் செந்தமிழ்ப் பாவாணர் வாடுறும் இக்கொடுமை"

எனக் குறிக்கின்றார். மேலும் கீர்த்தனைப் பாடலொன்றில் கள் சாராயம் தேனுக்கு மேலாகச் சிறப்புப் பெற்றமையும் 'வேளாண்மைத்

தொழிலினிலும் பெரும் லாபம் வக்கீல் தொழிலில் கிட்டுவதும் மனைவி கணவனை அடக்குவதும்' வெள்ளையராட்சியால் விளைந்த கொடுமைகள் எனக் குறிப்பிடுகின்றார்.

இத்தகைய சிறப்புகள் பொருந்திய இவ்வரிய நூலினை அச்சிட்டுப் பரப்பிட விழைவு கொண்டு நாம் வேண்டியபோது ஓலைச் சுவடியிலிருந்து படியெடுத்து வழங்கி உதவிய சுவாமிகளின் பெயரரும் கௌமார மடாலயத் தலைவருமான திரு. தி.செ.முருகதாச சுவாமிகள் அவர்களுக்கும் அவ்வப்போது ஆலோசனைகள் வழங்கி எங்கள் ஐயங்களைக் களைந்த புலவர் தி.மு. சங்கரலிங்கனார் அவர்களுக்கும் எங்களின் நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறோம். சுவாமிகளின் ஐம்பதாயிரத்துக்கும் மேற்பட்ட பழம் பாடல்களை இன்று வரை பாதுகாத்து வருகின்ற இவ்விரு பெருமக்களுக்கும் தமிழ் கூறும் நல்லுலகே நன்றிக் கடன் பட்டுள்ளது எனில் அது மிகையன்று. இவ்வரிய நூலினை அச்சிடும் செலவில் பாதித் தொகையினை வழங்க முன் வந்த திருவல்லிக்கேணி நெல்லை அல்வா இனிப்பக உரிமையாளர் இலக்கிய ஆர்வலர் குண்டையார் தண்டலம் தட்சிணாமூர்த்தி அவர்களுக்கும் அவ்வப்போது எங்களை ஊக்கப்படுத்திவரும் தத்துவக் கவிஞர் முருகுவண்ணன் அவர்களுக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூலினைப் பிழையின்றிக் கொணர உதவிய பிழை திருத்துநரும் எனது நெடுநாள் நண்பரும், சிறந்த இலக்கியப் படைப்பாளருமான புலவர் திரு. வெற்றியழகனார் அவர்களுக்கும், சிறப்புற அச்சிட்டுத் தந்த வீரபத்திரர் அச்சகத்தார்க்கும் முகப்போவியத் தலைப்பினை வரைந்து வழங்கிய ஓவியர் கலைவாணன் அவர்களுக்கும் எங்கள் நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறோம். 'முத்தமிழ் அருள் நெறி மன்றம்' தொடர்ந்து தமிழுக்கும் சமயத்துக்கும் தொண்டாற்றி உங்களின் நல்லாதரவினை விழையும்.

அன்பு,

மு. பா. சாரதி (மு. வலவன்)



மகான் வண்ணச் சரபம் திருப்புகழ்ச்
சுவாமிகள், முருகதாச சுவாமிகள் என வழங்கும்
அருட்பெருந்திரு

# தண்டபாணி சுவாமிகள்

தோற்றம் :
28 – 11 – 1839

புகழ்நிலை :
5 – 7 – 1898



முத்தமிழ் அருள்நெறி மன்றச்
செயலர் :
ஓவியப் பாவலர்- புலவர்
**மு. பார்த்தசாரதி**
**(வலவன்)**



முத்தமிழ் அருள்நெறி மன்றத்
தலைவர் :
குண்டையார் தண்டலம்
**வே. தட்சிணாமூர்த்தி**

சென்னை - திருவல்லிக்கேணி
முத்தமிழ் அருள்நெறி மன்றத்தின்

தலைவர் திரு. தட்சிணாமூர்த்தி அவர்களுக்கும்

செயலர் திரு. மு. பா. சாரதி (வலவன்) அவர்களுக்கும்

# பாராட்டு வாழ்த்துப் பாடல்

அறுசீர்

1 முத்தமிழ்வண் ணச்சரப தண்டபா
ணிப்பெயர்கொள் முனிவன் அந்நாள்
வித்தகமார் அருள்நெறியைப் பலவாறுகத்
தம்மனத்துள் மிகவும் கொண்டு
நத்தருள்நூல் பலசெய்தார், இந்நாட்டில்
ஆங்கிலியர் நவைசேர் ஆட்சி
வைத்திடும்நாள் பசுக்கொலைசெய் தின்புறுதல்
கண்டுமனம் வருந்த லானார்.

2. ஆங்கிலியப் பெயருறுவோர் கருணையற்ற
மனத்துடனே ஆட்சி செய்து
தீங்கிசையும் பசுக்கொலைசெய் துயர்வடைதல்
கண்டுள்ளம் திகைத்து நொந்தே
ஓங்கிசைசேர் தண்டபா ணிப்பெருமான்
பலநூலில் உரைத்திட் டாலும்
ஈங்கிசைகொள் ஆங்கிலியர் அந்தாதி
எனவொருநூல் இசைத்திட் டாரே.

3. கொலைமுழுதும் இவ்வுலகில் தவிர்ப்பதில்நல்
லார்வம்மிகக் கொண்டுற் றாலும்
தலையாகப் பசுக்கொலையை முதலிலறப்
புரிவதெண்ணித் தவம்செய் திட்ட
நிலையினில்ஆங் கிலஅரசு நீங்கிஉயர்
தமிழரசு நிலவக் காணும்
கலையான இப்பெருநூல் சீவகா
ருணியர்மனம் களிப்ப தாமால்.

4. இத்திருநூ லினருமை உணர்ந்துவெளி
யிட்டருளும் எண்ணம் கொண்டு
முத்தமிழின் அருள்நெறிமன் றத்தலைவர்
தட்சிணா மூர்த்தி அன்பர்,

மெத்தபுகழ்ப் பாம்பனடி களின்சீடர்
சாரதிப்பேர் மேவு கின்ற
சித்தமகிழ் வலவனெனும் செயலரும்சேர்ந்
தின்பமுடன் செயலுற் றாரே.

5. செம்மைநலம் கொடுதொண்டு செயஇலங்கிம்
மன்றத்தின் சிறப்புக் கேற்ப
இம்மணிற்பல் லன்பர்கொள ஆங்கிலியர்
அந்தாதி எனுமிந் நூலைத்
தம்பொருள்கொண் டச்சிட்டு முதல்வெளியீ
டென்னஇன்று தருகின் றார்க்கவ்
அம்மையப்பன் தருமுருக வேளருள
வாழ்த்துகிறேன் அவர்சீர் வாழி.

இன்னணம்
நூலாசிரியர் சுவாமிகள் பெயரர்
முருகதாச சுவாமிகள்
கௌமார மடாலயத் தலைவர்
திருவாமாத்தூர்
விழுப்புரம் T.K. 605602

தங்கள்
தண்டபாணி சுவாமித் திருமடம்
அடிவாரம், பழனி.

வெண்பா

1. தென்பாண்டி நாட்டுத் திருநெல்லை யூர்தந்த
இன்பாளன் தண்டபா ணிப்பெரியோன் - அன்பாய்
அருள்நூலுள் ஆங்கிலியர் அந்தாதி என்னும்
ஒருநூலும் உண்டே உயர்ந்து.

2. ஆங்கிலியர் இங்கே அமைந்தாட்சி செய்நாளில்
தாங்கு புகழ்ப்பசுவைச் சாடியுண்ணும்—தீங்கினைக்கண்(டு)
உள்ளமிக நொந்தே உறுமரசும் வீழ்கஎன
விள்ளுமிந்நூல் எத்திறத்தும் மேல்.

3. அன்புதட்சி ணாமூர்த்தி ஆன்ற வலவனின்னோர்
மன்பதையோர் கொண்டு மகிழ்வடைய—இன்பமுடன்
முத்தமிழ்ச்சீர் தாங்குமருள் முன்னுநெறி மன்றத்தின்
புத்தகமாய்த் தந்தார் பொலிந்து.

4. வலவனோ டன்பு மலிதட்சிணா மூர்த்தி
இலகுமன்பர் தொண்டியற்றி என்றும்—பலநலமும்
கொண்டுபுவி வாழக் குறித்துப் பணிகின்றேன்
தண்டையணி மாமுருகன் தாள்.

அன்பன்
புலவர் தி. மு சங்கரலிங்கம்
திருவாமாத்தூர்

உ

குருவே துணை

# ஆங்கிலியரந்தாதி

காப்பு :

கட்டளைக் கலித்துறை

அந்தாதி ஒன்று பசுவதைத் தூன்உண்ணும் ஆங்கிலியர்
வெந்தானை யோடு கனற்பூனை யாக விளம்பெனக்குச்
செந்தா மரைகொண்கன் சங்கரன் பார்ப்பதி சீதரன்கைத்
தந்தா வளமுகன் சேய்குரு வாம்தெய்வத் தாள்துணையே!

1

சொல்லரு மேன்மைப் பசுமேடம் ஆதிய துய்த்துவக்கும்
புல்லறி வாண்மை பொலிஆங் கிலியர் புறங்கொடுக்க
வெல்லவல் லாணைப் படையா திருக்கின்ற வேதனுக்கு
நல்ல மதியென்றுண் டாகுங்கொ லோவெள்ளை நாமகளே!

2

நாமக ளேநின் கழுத்தணி மங்கல நாண்அறிய
நீமகிழ்ந் தென்சொற் கவிமாலை யூடொன்றி நின்றுநித்தம்
ஆமரை ஆதிய கொன்றுதின் ருர்த்திடும் ஆங்கிலியர்
தாமடி யோடு கெடுமாறு செய்யத் ததியிதுவே!

3

ததிகண்டொவ் வோர்கொடு நீதிஉண் டாக்கித் தரையினரும்
அதிவிதத் துன்பம்என் கண்காணச் செய்திடும் ஆங்கிலியர்
நிதிஇறு மாப்பு முதற்சீர்எல் லாம்வெந்து நீறச்செய்வீர்
கதிரவ னுதிய ராமறை யேத்துங் கடவுளரே!

4

கடல்சூழும் பார்மகள் பாவம்பொ ருது கதறிடச்செய்(து)
அடல்வேழக் கூட்டங்கள் என்ன உலாவிடும் ஆங்கிலியர்
குடல்யாவும் நாய்நரிக் கூணுகச் செய்திடுங் கொற்றவனை
இடல்வேண்டும் அன்றுகொல் லோதெய்வ மேநிற் கிரக்கமின்றே!

5

இரக்கம் அணுவள வேனுமில் லாமல் இளம்பசுக்கன்(று)
அரற்ற அரிந்துவெந்(து) உண்டுகு லாவிடும் ஆங்கிலியர்
சிரக்கும்பல் ஆயிரம் செய்யவல் லானைச் செயாப்பிரமன்
கரக்கணத் தைச்சிரங் கொய்காரி யின்று கழிக்கில்நன்றே!

6

கழியிறு மாப்பில் முழுகித் தமது கரியகுடைக்(கு)
அழிவிலை யென்றுசொல் லிக்களி கூரும்பல் ஆங்கிலியர்
விழிஎதிர் கண்ணனைப் பார்த்தனைப் போலும்வல் வீரர்களைப்
பொழிதரச் செய்திறல் இல்லைகொல் லோசொல் பொதுத்தெய்வமே!

7

தெய்வத்தை நம்பிய நல்லோரை ஏசித் திருட்டுத்தன்மை
கைவந்த ஆங்கிலி யர்க்காட்செய் வார்மகிழ் காலத்தென்னை
மெய்வயிற் சேர்த்ததென் வெவ்வினை யோமலர் வேதியனே
நெய்வழி வெண்கம லப்பொகுட் டேறிய நேரிழையே!

8

நேரார் ஒருவரின் றென்றுபல் கோட்டை நிலையழிக்கும்
நீராரும் ஆங்கி லியராம் அனேகரும் நீறுபடப்
போராடும் ஆசை சிறிதுமில் லாவெறும் பொய்த்தவர்போற்
சோரா தெனைப்புரப் பாய்தெய்வ மாம்ஒரு தொல்பொருளே!

9

பொருளாண்மை தன்னைச் சிலவா றறிந்து பொருவிலுண்மை
அருளாண்மை சற்றும் அறியார்க ளாவளர் ஆங்கிலியர்
இருளாண்மை முற்றும் அழிவுறக் காண்பதென் இச்சைகண்டாய்
தெருளாண்மை யோர்க்கொரு தஞ்சமென் றேங்கும் திருத்தெய்வமே!

10

திருமாதென் றுள்ள கொடியாள்பல் ஆன்நிணம் தின்பவர்க்குப்
பெருமாண் பளித்துநல் லோர்க்கின்னல் ஈந்து பிணங்குகின்றாள்
அருமாந்த வேத நெறிபிற ழாமல் அவட்டிருத்தற்(கு)
ஒருமா தவன்பிறந் தானில்லை யேஇவ் வுலகத்திலே!

11

உலகத்து நீசத் தனத்தார்எல் லோரும் ஒருங்குசெய்யும்
கலகத்தை வென்று களிக்கவல் லான்பெருங் காட்சிநல்காய்
அலகற்ற வாய சமயங்கள் போற்ற அகண்டமதாய்
இலகிப்பல் கோடி குருவாய் விளங்கும் எழிற்றெய்வமே!

12

தெய்வங்கள் கோடியுள் ஒன்றேனும் ஆன்நிணம் தின்றுவப்பார்
பொய்வந்த நீதிகண்டு உட்புழுங் காத புதுமைஎன்னே
மைவந்த கண்மட வாள்எவ ளேனும்அவ் வஞ்சகரைக்
கொய்வண் குலாவுகைச் சேய்உத வாத கொடுமைஎன்னே!

13

கொடுங்கோ லரசர் சிகாமணி யான குணுங்கர்களை
அடுங்கோர வீரனைக் காணுமுன் முத்தி யடையநண்ணிப்
படுங்கோல மாதவத் தீர்,தவம் யாவும் பலிதமின்றிக்
கெடும்கோ ரணியுமிக உண்டாம் என்சொல்உண்மை கேட்டுய்மினே!

14

கேட்டுக்குழர் கொள்கல மாம்ஆங் கிலியர்தம் கெக்கலிகேட்(டு)
ஆட்டுக் குழாம்புலிக் கஞ்சல்ஒத் தேங்கும் அறநெறியோர்
தோட்டுக் கமல மலர்மாது கொண்கனிற் றேன்றொருவன்
நாட்டுக் கிதஞ்செயக் கண்டுவப் பாகிடும் நாளினிதே!

15

நாளொன்றிற் சற்று நினைத்தோதும் நீசர்க்கு நானிலமும்
வாளொன்று தோளும் கொடுத்த பராபரன், வாரமுற்றும்
தாளொன்ற நாடும் எனையிந்த வாறு தயக்கலென்னே
வேளொன்று சிற்றிடைப் பாவாய்என் நாவிலும் மேயவனே!

16

மேயும் பசுஒன்றைப் பற்றிய வாய்ப்புலி விட்டிடுமாறு
ஆயும் தமிழ்க்கவி ஒன்றுமுன் செய்த(து) இன்றுனினங்கள்
மாயும் படிகொல் பவர்மேற் சினந்துசொல் வண்கவிமுற்(று)
ஏயும் பயன்தந் திடாததென் னேவெள்ளை ஏந்திழையே!

ஆ.—2

## 17

ஏந்திய சூலம்ஒண் சக்கரம் வேல்முதல் எஃகனந்தம்
தாந்திருக் கையிற் கொடுவாழும் தேவர் சகலர்களும்
மாந்திடப் பல்பசுக் கொல்வாருக் கஞ்சி மயங்கினர்போன்(று)
யாந்திடுக் கெய்த இருக்கின்ற பாவத்தை என்சொல்வதே!

## 18

என்னந் தரங்கத் திடைநின் றெருதெய்வம் யாதுகொலோ
இன்னம் பிறந்து தவியாத மெய்முத்தி எய்தலினும்
அன்னந் தனிற்பல ஊன்கலந் துண்கின்ற அரங்கிலியர்க்குக்
கின்னம் படச்செயல் மேல்எனக் காட்டிக் கிளர்கின்றதே!

## 19

கிளர்சந் தனக்கிரிக் கோன்முத லோர்பெருங் கீர்த்தியொடு
வளர்கின் றனரென்கை மெய்யாகில் இந்த மகிதலத்தில்
தளர்வொன்றி ஆனினம் மேடங்கள் ஆதிய சாகக்கொல்வார்
உளமிந்த வாறு களிகூரு மோசொல்மின் ஓர்ந்தவரே!

## 20

ஓராமற் பொய்பகர் கின்றூர்க் களவில் உவகைநல்கிப்
பாராளும் அரங்கிலி யர்க்கெம ஞெம்ஒரு பத்தன்வந்து
கூராரும் வேற்கை யுடன்ஆ டற்காணக் குறிக்கும்நெஞ்சம்
சீராரப் பெற்றிடி னேயிற வாஒரு தெய்வம்உண்டே!

## 21

உண்டென் றுணர்ந்தவர் கொண்டாடும் தெய்வம் உலகமுற்றும்
பண்டென் றுறமும் முடிவேந்தர் ஆண்டிடப் பார்த்ததுபோய்
இண்டென் றடரும்வல் வீணர்க்கிந் நாளில் இடும்கொடுமை
கண்டென் துயரம் மலிந்தது முற்றும் கழிவதென்றே!

## 22

கழிவாரி சூழும் உலகிற்பல் லோர்சினேக் காலிகொல்லும்
பழிகாரர்க் காட்பட் டுவகையுற் றேர்பல பத்தர்அருள்
பொழிகா ரனையமெய்த் தெய்வத்தை நம்பிப் புழுங்குகின்றூர்
இழிவார் இந்நாளின் பிறந்துழன் றேன்உய்வ தெவ்வண்ணமே!

## 23

வண்ணத் தமிழ்க்கும் இரங்காமல் என்னை வருத்திப்பல்லூன்
உண்ணத் துணியும் குலீனருக் காக்கம் உதவுகின்ருன்
எண்ணப் படும்சட் சமயத்துத் தொண்டர் இயற்குமுன்னல்
நண்ணத் தகும்செல்வம் எல்லாம் தரும்தெய்வ நாயகனே!

## 24

நாயனை யாருக் கிறுமாப்போர் ஆயிரம் நல்கி,உண்மைத்
தூயவர் வாடுறக் காண்கின்ற தாகும்இத் துர்க்குணம்போய்
நேய மறையில் விதித்துள்ள வாறுஎன்று நீபுரிவாய்
மாயவன் ஆதியர் எல்லோரு மாகி வளரும்ஒன்றே!

## 25

ஒன்றே பரம்என் றுணர்ந்தாரிற் பேசி உலகினிடை
நன்றே அருந்தும் சமயத்தி ஞேர்க்கு நவையுரைத்துக்
கன்றேன முந்தின்னும் ஈனர் உதிரம் கடல்புகுவ(து)
என்றே எனத்தளர் வார்தவம் போலும்ஓர் ஏற்றமின்றே!

## 26

ஏற்றான் அருந்தும் கொடியார் அனேகர்க் கியமன்எனத்
தோற்றாகச் சற்குரு நாதன்வந் தாலன்றித் தொல்புவியின்
வேற்றூர்கள் தோறும் அலைந்திரந் துண்டு மெலியுமன்பர்
பாற்றாய மாதவப் பேருய ஞானம் படர்வதின்றே!

## 27

படங்கொண்ட பாந்தட் குலம்போலும் ஈனர் பதைபதைக்கத்
தடங்கொண்ட செஞ்சிறைப் புட்கோவிற் ருக்கும் தகையருள்வாய்
கடங்கொண்ட வேதிய ஞய்ச்சக் கராயுதக் காகுத்தனுய்
நடங்கொண்ட தாட்சிவ ஞய்விளை யாடொரு நற்சுடரே!

## 28

சுடரா தியரைத் தொழநாணி மன்னவன் சூழ்ந்துசெய்யும்
இடரால் இறந்தவ னைப்போற்றும் ஈனர் இகலழித்துப்
படரா யிரம்தமிழ்ப் பாமாலை சூடும் பரிசருள்வாய்
விடரா லறியநண் ணுப்பொரு ளாகிய மெய்த்தெய்வமே!

## 29

மெய்த்தகைச் சித்தி நனிவேண்டும் என்றன்னை வித்தும்இடாச்
செய்த்தலைத் தீர்வைப் பகுதிகொள் வார்க்கஞ்சச் செய்தல்நன்றே
பொய்த்தனம் வேண்டி அறம்பிழைப் பார்க்கொரு புத்தெமனு
நெய்த்தனி வேலொடு வாழவைப் பாய்எங்கும் நின்றவனே!

## 30

நின்ற உலகத்தில் உள்ளார் பலரும் நெடிதுயிர்ப்பப்
பொன்றலில் மிக்க துயர்செய்யும் ஈனப் புலையர்களை
வென்றனந் தம்புகழ்ப் பாமாலை சூடி மிகும்உவகை
ஒன்ற விளங்குகில் லாச்சித்தர் வாழ்க்கை உயர்வல்லவே!

## 31

உயருங் கருணை அணுவள வேனும் உளத்திலின்றி
அயரும் படியிளங் கன்றுதி யுங்கொல்லும் ஆங்கிலியர்
வியனென்றும் ஆண்மை கெடச்செய்யு மாறு விரும்புகில்லார்
இயல்வென்றி மாதவ வென்றிபெற் றாலும் இழிந்தவரே!

## 32

இழிந்தபச் சூனும் வெறிநீரும் மிக்குண்ணும் ஈனர்தம்மேற்
பொழிந்தசெஞ் சாயகக் கைவில்லி யாவன்? அப்புண்ணியனே
வழிந்த கருணைக்கண் மாயன்என் றோர்ந்தும்என் மாட்டுமிடி
ஒழிந்த கடாட்சம்வைத் தாளில்லை யேமலர் ஒண்டொடியே!

## 33

ஒண்டகைக் கைவளை மானுர் உவகை உயர்த்தும்இருட்
குண்டர்தம் பாவக் குடைநீழற் பட்டுக் கொதித்தயர்வேன்
பண்டடி யார்பெறும் பேறுறு மாறுகண் பார்த்தருள்வாய்
தண்டமிழ்ப் பாவலர் சொற்போல் நடாத்தும் தனித்தெய்வமே!

## 34

தனித்தபுள் ளாகிக் கனலூடு விண்ணிற் றயங்கிஅப்பால்
மனித்த வடிவக் குருநாத னாகிப்பின் பாரிடை வந்துசொன்ன
இனித்தசொல் மெய்யெனில் ஈனர்க்கிவ் வாறஞ்ச ஏன்விடுத்தாய்
தொனித்த மறைகள் பலகோடி கூடித் துதிக்கும்ஒன்றே!

35

துதிக்கைக் கடாசலம் போன்றிறு மாக்கும் தொழிற்குணுங்கர்
விதிக்கைக்குட் பட்டு மெலிகின்ற பாரினர் வெப்பமுற்றும்
மதிக்கத் தகும்உணர் வேன்அளித் தாய்மற்ற மா தவர்போல்
கதிக்கிச்சை கொண்டுழைப் பேனல்லவோ முதற்காரணனே!

36

காரண ஞானக் கதிஎளி தென்றும்பல் காலிகொல்லும்
நீரண வும்கொடி யோர்தம்மை வென்றிந் நிலத்திடைஞர்
நாரணன் போற்றிகழ் வாழ்வரி தென்றும் நவிலல்ஒப்பேன்
ஆரணத் தோடுபல் ஆகமம் போற்றும் அருட்கொண்டலே!

37

கொண்டல்கண் டஞ்சக் கொடுங்கோல் நடத்தும் குணுங்கர்களை
விண்டலம் மண்டலத் தோடுய்ய வெல்லும் விறலளிப்பாய்
தண்டமும் வேலும் புனைகின்ற தோளுடைச் சற்குருவாய்
எண்டரு தெய்வங்கள் எல்லாமு மாகி இலங்கும்ஒன்றே!

38

இலங்கைக் கதிபனைச் செற்றுன்அந் நாள்இவ் இகத்திடைவந்து
அலங்கற் புயத்துச் சிலைகோலிக் கார்கடல் ஆங்கிலியர்
மலங்கப் பொருகின்ற நாளேநன் னுள்என்னும் வாயுடையேன்
கலங்கத் தகுங்கொல் இரங்காய்செந் தாமரைக் கன்னிகையே!

39

கன்னிநன் நாட்டிற் பிறந்தாரும் ஈனக் கலைபயில
இன்னிசைச் செந்தமிழ்ப் பாவாணர் வாடுறும் இக்கொடுமை
துன்னிடக் கண்டும் விழித்தெழுந் தான்இல தொல்பொதியைத்
தன்னிடை கோடி முனிவோருள் வைகும் தவத்தரசே!

40

தவத்தால்எப் பேறும் வருமென்று வள்ளுவன் சாற்றக்கண்டும்
அவத்தாற் பெரிய புலையர்தம் பாழ்அர சாட்சியிடை
சிவத்தே கலக்க முயல்வார்தம் மோடெனைச் சேர்த்துக்கொல்லேல்
நவத்தோர் உணர்ந்துணர்ந் தேத்தக் குலாவொரு நற்பரமே!

## 41

நற்பது மாதனப் பேதாய்நின் கண்கள்இந் நாளிற்பொல்லா
அற்பர்க ளாம்கொலைத் தீயரைப் பார்ப்பதென்? ஆன்றதமிழ்
விற்பனர் தங்களைப் பார்இனி யேனும் விறல்நெடுமால்
சொற்பனத் தென்னிடை தோன்றிய உண்மை துலங்கிடவே!

## 42

துலங்கும் பொருளிற் றலையாய் விளங்கெழிற் சூரியனே
நிலங்குன்றம் ஆழி முதல்யாவும் பார்க்கின்ற நீபசுக்கள்
கலங்கும் படிகொன்று தின்பாரைக் கண்டு களிக்கின்றையோ
இலங்கும் கருணை ஒருசிறி தேனும்நிற் கில்லைகொல்லே!

## 43

கொல்லா விரதப் பெருநெறி பற்றிக் குவலயத்தில்
எல்லாரும் வாழக் கருதுகின் றேனுக் கிரங்குகில்லாய்
பொல்லாப் புலையர் அநீதிகள் கண்டும் பொறுத்திருந்தாய்
வில்லார் கிரணங்கள் ஆயிரம் தோய்தரும் வெய்யவனே!

## 44

வெய்ய கொலைத்தொழில் மேற்கொண் டொழுகிடும் வீணர்களைப்
பையர வின்கனல் வாய்த்தேரை யாகப் படுத்துதற்காம்
செய்ய வரம்எனக் கீயஒண் ணாதுகொல், தேவரெல்லாம்
உய்ய ஒருதரம் கண்ணால் மணிமிக் குகுத்தவனே!

## 45

உகுத்தகண் ணீரொ டுலகத்து மாந்தர் ஒருங்கலற
மிகுத்த அநீதி புரிகின்ற நீசர்தம் வேருமறச்
செகுத்திடு வாற்றெழும் பேறேனும் நல்கச் சிறிதிரங்காய்
பகுத்த பணாடவிப் பூணார் சடிலப் பராபரனே!

## 46

பரந்தவை யத்துயிர் எல்லாம்நின் சேய்எனப் பாடுமறைச்
சிரந்தனைச் சற்று மதியாமற் கொன்றுதினும் கொடியோர்
உரந்தணக் கத்தகும் வீரன்உண் டாம்படி உட்கருதாய்
நிரந்தர யோகம் உடையார் ஓர்பாதியில் நின்றகொம்பே!

## 47

கொம்புக் களிறும்அஞ் சும்சீய மன்ன கொடியவரைச்
சிம்புட் பறவை எனத்தாக்கும் வீரத் திறலருள்வாய்
பைம்புற் கறிக்கும் பசுஏறு வான்ஒரு பாதியினில்
அம்புக்கட் கோகிலம் போல நிலாவும் அணங்கரசே!

## 48

அணங்கனை யாள்ஒரு காரணத் தால்அங் கவிழ்த்ததலை
இணங்க முடிக்கும் பொருட்டுதும் சங்குடை ஏந்தலிந்நாள்
நிணங்களித் துண்ணும் கொடியரைத் தாக்க நினைத்திலனுய்ப்
பணங்கவிக் கும்பணிப் பாய்மேற் றுயில்வது பாவம்அன்றே!

## 49

பாவம் பெருகிப் பழுதற்ற புண்ணியம் பாறிடச்செய்து
ஆவ லெழுந்த படியே நடத்திடும் ஆங்கிலியர்
ஏவல்செய் தின்பம் உறுவார்எல் லோருமிக் கேங்கஒரு
காவலன் தோன்றப் புரிவாய்சங் காழியங் கைம்முகிலே!

## 50

கைம்முக வேழ முகத்தான் எனது கனவில்ஒரு
மெய்ம்மறை சொல்லி யதுஉண் டைய கோ;அந்த வீறுபெற்றும்
பொய்ம்மத வாதப் புலையருக் கஞ்சிப் புழுங்குகின்றேன்
எம்மத மேனும் கொன்றுண்ணுத தாகில் எனக்கினிதே!

## 51

எனக்கன்று நீசொன்ன சொற்பிழை யாமல்வல் ஈனர்குலம்
தனக்கந்த கன்என்ன வாழவைத் தம்பொற் சரண்அளிப்பாய்
கனக்கொந் தளகப் பிடிபோலும் வல்லவைக் கன்னிகொங்கை
இனக்குன்றம் ஆரும் தடமார்பு காட்டும் எழிற்களிறே!

## 52

எழிலார்பைந் தோகை மயிலேறி மாதர் இருவரோடென்
விழிநேரிற் றேன்றிடத் தாமத மேன்?புலை வெண்குணுங்கர்
அழிவாகி ஆனினம் வாழத் தகாதுகொல்? அத்தண்மலர்ப்
பொழில்சூழும் குன்றங்கள் தோறும்நின் றாடும் புகழ்க்கந்தனே!

53

கந்தக் கடம்ப மலரே யனைய கவித்தொடைநின்
சொந்தத்துக் கெத்தனை சொற்றுளன் யான்,கறைத் தோல்மகுட
பந்தத்து நீசரை வென்றிடப் பார்க்கப் படாதுகொல்லோ
சந்தக் கிளிமகிழ் ஈராறு தோளுடைச் சண்முகனே!

54

முகமன் பகர்பவர்க் கின்னல்மிக் கீந்து முருடரென
அகமிஞ்சு வாருக்கு வேண்டிய வாசெய்யும் ஆங்கிலியர்
தகரும் படிசெய்ய வல்லானைக் காட்டத் ததியிதுகாண்
இகமும் பரமும்ஒன் றும்எனக் காட்டிய என்குருவே!

55

குருவாகி எண்ணில்பல் கோடி சமயங் குலவச்செய்திட்(டு)
அருவா நிறைந்தொளிர் மெய்ப்பொரு ளேஇகல் ஆங்கிலியர்
பெருவாழ் விழந்து கெடுமாறு செய்யப் பெருநிலத்துஓர்
குருவா வரற்கிசை வாய்உண்மை யாவும் ஒளித்தனவே!

56

ஒளிகொண்ட செங்கதி ரும்சட மாமென் றுரைக்குமவர்
களிகொண் டுலாவிட வள்ளுரம் தின்னும் கடையர்மதுத்
துளிகொண்ட தாமரை யாள்இன்ப மெய்தித் துலங்கல்நன்றே
வெளிகொண்ட பேரறி வாய்என்றும் வாழும் விழுப்பொருளே!

57

விழுமிய நான்மறைச் சீலமெல் லாம்குன்ற, வெந்நிணந்தேர்
கழுகனை யார்களிக் கூத்தாடி வாழ்கொடுங் காலத்தென்னை
அழுது வருந்தப் படுத்திடும் தீவினை அற்றெழியக்
குழுமிய தொண்ட ரொடுதோற்று வானைக் குறித்தனனே!

58

குறிப்பார் குறித்த படிவேடங் கொண்டு குலவுமுண்மை
நெறிப்பான்மை தோய்ந்த நிசத்தெய்வ மேவஞ்ச நீசர்முழு
வெறிப்பாழ் அநீதிக் கருங்குடை நீழலில் மேனிவிடும்
கிறிப்பால் எணத்தள்ளி டேல்இது வேமிகக் கேட்டுளனே!

## 59

உளங்கொண்ட மட்டும் புதுநீதி நூல்செய் துலகினர்க்குக்
களங்கொண்ட துன்பம் தருவார்கை தாங்கும் கருங்குடையை
இளங்கொண்டல் மூட்டிய தீப்போல் நொடியில் எரிப்பவனே
வளங்கொண்ட சற்குரு என்பார் மனத்தில் மலினமின்றே!

## 60

மலியுந் திருட்டி மலமூத் திரத்திடை வைக்குமன்னர்
கெலிகுன் றித் தோல்முடி யோடுவெட் டுண்டு கிடக்கவென்று
கலியன் கிடுகி டெனத்தக்க ஆடல்கள் காட்டுமவன்
ஒலிதங்கும் வன்கழற் ருள்தொழு வார்தவம் ஒப்பற்றதே!

## 61

ஒப்பத் தகாத அநீதி களேமிக் குஞற்றி நல்லோர்
கொப்பத்து வேழம் எனவாடக் காணும் குணுங்கரெல்லாம்
வெப்பத்தி லாழ்ந்து கெடும்படி ஆடும் விறலளிப்பாய்
முப்பத்து மூன்று வகைத்தேவர் போற்றும் முதற்றெய்வமே!

## 62

முதலையின் வாயிற்,கயம்போற் கதறி முறையிடும்பார்
இதமுறச் செய்ய நினையாமல் பாந்தள் எனும்அணையில்
நிதம்விழி துஞ்சும் நெடுமா லருகில் நெருங்கி அவன்
கதமொ டெழுந்திக லோர்ச்செறு மாசெயக் கற்றிலனே!

## 63

கற்றைச் சடாடவிப் பெம்மான்கண் ணுல்ஒரு கான்முளைதந்[து]
அற்றைத் தகுவர் குலவேர் களைந்தனன் ஆன்வதைப்பார்
இற்றைப் பொழுதிற் கெடுமாறுஓர் சேய்விரைந் தீகின்றிலான்
பொற்றைத் துணைமுலைப பார்ப்பதி பாகம் பொருந்தியுமே!

## 64

பொருந்தாரைச் செய்யும் வலிநிற்கின் றேயெனப் பூரிப்பெய்தும்
கருந்தா தனைய மனத்தாங் கிலியர் கருவறுத்து
வருந்தாது சட்சம யத்தோரும் வாழ்வுற வைப்பதற்காம்
பெருந்தாகம் ஈந்தவர் ஆரோ அகண்ட பெருவெளியே!

65

வெளிபோம் வரும்என்னும் வீணுரை யாடிடும் வெண்குணுங்கர்
களியாவும் தீர்ந்து கவலைக் கனலிற் கருகும்அந்நாள்
அளிகூரச் செய்தினி தாள்வாயென் றெண்ணி அடுத்தனன்காண்
ஒளியாய் இருள்மய மாய்ப்பொது வாகும் உலப்பில்ஒன்றே!

66

ஒன்றுய்ப்பல் கோடி விதமா யிலங்கும் உனைப்பணிந்தும்
கன்றுன் வதைத்துணும் பொல்லாருக் கஞ்சிக் கலங்குவனோ
குன்றுளும் சேயென வந்தெண்ணில் உண்மைகள் கூறியதும்
பொன்று விளிதல்நன் றேபக ராய்பரி பூரணனே!

67

பூர மிவர்ந்து புலவோர்தம் வாய்தொறும் போய்அவர்சொல்
சீரனந் தம்பலிக் கச்செய்த வாணி செழுந்தமிழின்
சார முணர்த்தி என்நாவி னிலுற்றும் தரைக்கிடர்செய்
கோரணி யோரைச் சுடத்தகும் பாடல் கொடாததென்னே!

68

கொடுக்கும் தொழிலிற் சலியாத நெஞ்சர் கொடுங்கலியால்
நடுக்கும் படிசெயும் தீமையும் கோடி நரரிருந்தும்
கடுக்கும் குணுங்கர்க் கரசாட்சி நல்கும் கனத்தவம்பும்
விடுக்கும் திறமும் உனக்கில்லை யோநல்ல மெய்ப்பொருளே!

69

மெய்ப்பொரு ளாம்உனைச் சற்றும்நம் பாதிந்த மேதினியின்
பொய்ப்பொருள் சேர்க்கும் புலைக்கொடுந் தீயர் புறம்புரவாது
எய்ப்பொடு தாழப்பொருவானைக் காணும்நல் இன்பம்நல்காய்
கைப்பொருள் போன்றடி யார்தமைக் காக்கும் கவின்தெய்வமே!

70

கவியாசை கொஞ்சமும் தோயார்க ளாகிக் கடல்வளையும்
புவியாசை மிஞ்சப் பெறும்கொலைப் பாதகர் போர்க்களத்தில்
அவியா ஒழிதலின் ஆனினம் ஆதிய ஆர்வமுறத்
தவியா இறைஞ்சுசொற் கேட்டருள் வாய்சச்சி தானந்தமே!

## 71

தானவர் தம்மினும் ஞானமில் லாத சமணரினும்
ஈனவெம் புத்தரி னும்கொடி யார்க்கர சீந்ததெய்வம்
மானமில் லாதது கொல்லோ மதிக்கும் மதியில்லதோ
நானறி யேன்அறி யச்சொல்லித் தேற்றும் நரருமின்றே!

## 72

நரர்போல் உருப்பெற்றும் நாயுண வேஉண்டு நாட்கழிக்கும்
கரவாளர் தங்குடைக் கீழ்ப்பட் டுவாடிக் கலங்கும்என்னை
வரமா தவர்சித்தர் தம்மோடு கூட்டி மகிழ்வைப்பாய்
பரமாகிச் சற்குரு வாய்ச்சொல்லு வார்சொற் படிநிற்பதே!

## 73

படிமாது கோவெனக் கூவும் அநீதி பலபுரிந்து
கடிநாய்க்கும் தீர்வைப் பணங்கொள்ளும் வஞ்சக் கயவர்தங்கள்
குடிகேடன் யாவன்? அவனே எமது குலதெய்வம்என்[று]
இடிபோற் றெனிக்கின்ற வாயுடை யார்என்றும் எந்தெய்வமே!

## 74

எந்த விதச்செல்வம் எய்தா தொழியினும் யாம்வருந்தேம்
அந்தண் உலகத் தினர்க்கோர் எமன்ஒக்கும் ஆங்கிலியர்
பைந்தண் கமலம் பனியால் எரியும் படிஎரிந்து
சிந்த ஒருவன் பொரக்காணும் பேரின்பம் சித்திக்கினே!

## 75

சித்தியின் ஆசை மலிந்துபல் யாக்கையிற் சீரழியா
முத்தியின் வேட்கை குறைவாகச் செய்த முழுப்பகைஞர்
பத்திசெய் தெய்வம் இகலோர்க ளால்அடி பட்டிறந்த[து]
எத்திசை யோர்க்கும் அதேதஞ்ச மாம்என்னும் ஈனர்களே!

## 76

ஈன மலியும் கழுதைக்கும் நாய்க்கும் இறைகொளற்கு
மானம் அணுவள வேனும்இல் லாக்கொடு வஞ்சகரை
ஞானமும் வீரமும் சேர்பெரி யோன்வந்து நாசம்செய்தற்[கு]
ஆன ஒருதினம் இல்லைகொல் லோதிகழ் ஆதித்தனே!

77

ஆதித்த சந்திரர் ஆதிய தெய்வங்கள் ஆயினும்பல்
கோதிற் பொலிந்துயிர் எல்லாம்கொன் றுண்ணும் குணுங்கர்களைச்
சேதிக்கத் தக்கவன் தோன்றநண் ணுத்திறம் சிந்தித்தால்
சோதித் தவமுடை யார்நெஞ்சம் யாவும் துடிக்கின்றதே!

78

துடியொடு சூலம் கரத்தேந்து காரியும் துர்க்கையும்நேர்
மடியறு வீரப பெருந்தே வதைகளும் மன்னவன்கை
அடிகொடு மாய்புத சிறுப்பயின் ஆண்மைகண் டஞ்சுமிந்தக்
கொடிதினை யாரொடு சொற்றழ லாமிக் குவலயத்தே!

79

குவலய மாதழ மாதவர் நெஞ்சம் கொதிக்கஉண்மை
அவலம தாக அறம்போய் ஒளிக்க அநீதிசெய்யும்
தவறுடை யார்தலை செந்நீர் நதியிற் றவழினன்றிச்
சிவன்முத லாகிய தெய்வம்எல் லாமும் செயலற்றவே!

80

செயங்கொண்ட வேலனை மாயனைப் போற்பல சித்தர்வந்து
கயங்கொண்ட கார்கடற் பொல்லாரை முற்றும் கறுவிவென்று
நயங்கொண்ட நான்மறை ஆகம நீதி நடாத்தினன்றிப்
பயங்கொண்ட சிந்தை மகிழாதந் தோஇந்தப் பார்மகட்கே!

81

பாரிற் பிறந்து வளர்ந்துபன் னூல்கற்றுப் பற்பலவாம்
ஊரிற் றிரிந்திரந் துண்டருட் கோலம் ஒருங்கணிந்தும்
போரிற் சிறந்ததிண் டோள்மன்னர் அஞ்சும் புகழ்விழையாப்
பேரிற் கடையர் இன்[று] அன்னவர்க் கானந்தப் பேறுமின்றே!

82

பெரு யிரந்தரும் மெய்யரு ளாண்மை பெறுமவர்மிக்[கு]
ஊருர் அநீதி புரிகின்ற மன்னர் உரம்பதைப்ப
நீருடும் ஈசன் நெடுமால்அன் றொரென நின்றெறுப்ப[து]
ஆரும் உல[கு]அழக் கண்டும்செய் யாமை அறப்பிழையே!

83

அறம்பொருள் இன்பம் எனுமூன்றும் தாண்டுமுன் ஆசில்முத்தித்
திறம்பெற நாடும் தவத்தீர் பசுக்கொலை செய்யும்வம்பர்
மறம்பெருக் காணவம் ஆதிய நோயில் வலியதன்றால்
சிறந்த வுபாசனை யால்அதை மாற்றிடச் சிந்திமினே!

84

சிந்திக்கும் வாழ்வனைத் துந்தரு வான்உளன், தெண்டனிட்டு
வந்தித்து நாடுமின் என்றுபல் ஆன்ற மறைசொல்வதால்
கந்திற் பிணிக்கப் படாக்களி றன்னஎன் காமர்நெஞ்சம்
முந்திக் கொலைஞர் குலவேர் களைந்திடல் முன்னியதே!

85

முன்னுவ தொன்று மொழிவதொன் றாகு முரண்மனத்தார்
என்னும் உலோபக் குணுங்கர்தம் வாழ்வொழித்(து) யாவர்களும்
பன்னும் அருமைப் புகழ்சூடு மாறெனைப் பார்த்தருள்வாய்
வின்னுத லாரிற் சிலர்தேறு மாறும் மிளிர்தெய்வமே!

86

தெய்வத் திருவருட் சீர்பெற்று வாழ்பெருஞ் சித்தர்உண்மைச்
சைவப் பயிர்க்கிடை யூறுய பொய்மைச் சமயத்துள்ளார்
உய்வற்று வாடச் செயும்பண்பி லார்என் றுரைக்குங்கொலோ
நெய்வற்றி டாமலர்ப் பீடத்து ளான்சொல் நிசமறையே!

87

நிசவேதம் சொல்லும் நெறிஆறும் கைக்கொண்டு நின்றுழைத்தும்
பிசகாம் புறநெறி ஒன்றுகொண் டார்பெறும் பேறுமின்றி
வசவேற்று நான்துயர் எய்தலி னுலிந்த மாநிலத்தில்
அசமாதி கொன்றுதின் பார்இறு மாப்புற் றவிர்கின்றதே!

88

அவியென்று வேள்வியில் ஊன்பெய்கின் றாரும் அதுதவிர்சீர்
புவியின்கண் ஓங்கிடச் செய்வது நாடிப் புலம்பும்என்சொல்
செவியின்கண் ஏற்றுக்கொ ளாதோ அகண்டிதச் சின்மயமாய்க்
கவிகொண்டு தோத்திரம் செய்வார்க்கந் நாள்அருட் கண்தந்ததே!

89

கண்டன யாவும் பரமாக நாடும் கருத்தமைந்தும்
வண்டமிழ்ப் பாடல் பலவா றிசைக்கும்நல் வாக்கமைந்தும்
தொண்டரிற் சேர்ந்தனம் என்றிறு மாக்கும் சுகமெய்திலேன்
குண்டர்செய் தீமை சகியா தயரும் குணம்பொலிந்தே!

90

குணங்கிய நாய்ச்சிறு வாலே யனைய குறுங்கர்தம்பால்
பிணங்கிய வாறு பெரும்போர் விளைத்துவெல் பீடடைந்து
கணங்களெல் லாங்கண்டு கொண்டாட நின்னுட் கலப்பதென்றோ
மணங்கமழ் பன்மலர்ப் பூசைசெய் வார்க்கருள் வான்பொருளே!

91

வானத்துத் தேவரைத் தானவர்கூடி வருத்தும்அந்நாள்
ஈனர்க் கரசிப் புவியில்உண் டாம்என் றெளிதுணர்ந்து
மானக் கவிதைப் பயன்எய்தி டாது வருந்துகின்றேன்
ஞானக் கடலின் அமுதாம் எனத்திகழ் நல்லருளே!

92

அருளோர் சிறிதும் மருவாத நெஞ்சகத் தாங்கிலியர்
இருளார் குடைப்பட்டு வாடாத மேன்மை எளிதுநல்கித்
தெருளார் புலவரும் மாதவத் தோரும் சிறப்படைந்து
வெருளாது வாழப் புரிவாய்எங் கெங்கும் விளங்கும்ஒன்றே!

93

விளங்கும் திருவரு ளானந்தச் செல்வம் விரும்பும்அன்பர்
களங்கம் பெருகித் தவிக்கஎன் றோசினைக் காலியுடன்
இளங்கன் றும் கொன்றுண் பவர்க்கே உலகுமுற் றீந்திருந்தாய்
வளங்கொண்ட நாவலர் எல்லோரும் நாளும் வழுத்தும்ஒன்றே!

94

வழுவைக் குலம்பொரு பாவாணர் ஏங்குற, வானரத்தின்
குழூஉக்கும் சிற்சிலர் ஆர்க்கின்ற காலக் கொடுமையுடன்
பழுதுற்ற நீசக் கொடுங்கோலும் சேர்ந்திடப் பண்ணினையே
அழுதெய்த்து ளேம்இரங்காய் தெய்வமே நன்மை யாம்படியே!

95

ஆம்போதெதுவும் செயலாம்என் றெண்ணி அகங்கரித்து
பாம்போ தருந்தும் குயிலொத்து லாவிடும் வஞ்சரெல்லாம்
சாம்போது வேண்டித் தவிப்பார்க் கிரங்கத் தகாதுகொல்லோ
தேம்போதன் ஆதியு மூவரும் தேவரும் செப்பும்ஒன்றே!

96

செப்பணிக் கொங்கை மடவார்க்கும் மூடர்க்கும் தித்திப்பதாம்
தப்பனந் தஞ்செய்யும் பொல்லார் அநீதித் தகைமுழுதும்
அப்பமர் சென்னியன் தீய்த்த மதிளொத் தழிவதென்றே
ஒப்பறு சத்தியத் தொண்டர்தம் பாதத் துதிர்துகளே!

97

உதிரங் குடித்து நிணந்தின்னு மூடர்க் குரிமைகொண்டு
கதிர்குன்றிப் பாழ்பட் டதுபோதும் நான்மறை கற்றவர்சொல்
விதிநம்பி நீதி புரிவார்தம் பால்இனி மேவுகண்டாய்
சதிரொன்று மால்பல ராகி நிலாவுசெஞ் சக்கரமே!

98

சக்கரக் கைநெடு மால்உரத் திற்செழுந் தாமரையில்
எக்கணத் துந்திகழ் நங்காய் உனக்கொன் றியம்புகின்றேன்
மக்களிற் றேன்றி நிணந்தின்னும் தன்மையில் வல்விருகம்
ஒக்க நடப்பவர் இன்புறப் பார்ப்ப தொழிவிரைந்தே!

99

விரையார் களப முலையார்தம் மோகத்தும் மீறுமிச்சை
தரைவாழப் பார்ப்பதிற் கொண்டுளன் காண் இது சத்தியந்தான்
மரைபோலும் தீயர் குடைநீழற் பால்என்னை மாய்த்தொழியேல்
உரையால் அளந்து தவியார் உணர்வில் ஒளிர்பரமே!

100

பரந்தவை யத்துள்ள மாதவ ராதிய பற்பலரும்
நிரந்தரம் சோகப் படாவண்ணம் நீச நெறிக்கொடியோர்
திரந்தணக் கும்படி பல்பாடல் நாடொறுஞ் செப்பினன்மேல்
சுரந்த கருணைய(து) யாதோ அதன்புகழ் சொல்லரிதே!

பயன்

வாக்குக் கொருதெய்வம் உண்டெனத் தென்றல் வரைமுனியும்
நாக்குப் படைத்தவ ரிற்பல பேரும் நவிலல் மெய்யேல்
ஆக்குட் டியுந்தின் னும்பொல்லார் பல்கும் அழிவுறச்சொல்
பாக்குப்பம் என்சொந்தம் ஆமோ அகண்ட பராபரமே!

தெய்வமே துணை

மெய்யடியார் திருவடிகளே சரணம்

# கீர்த்தனை

இராகம் : கரகரப்ரியா — எடுப்பு — தாளம் : ஆதி

இங்கிலீசுக்காரர் அநியாயக் கொடுமையை
என்னென்று சொல்வேன் அம்மா (இங்கி)

## தொடுப்பு

பங்குக்குத் தகப்பன்பால் மகன்சண்டை செய்வதும்
பாரிக்கு நாயகன் பயப்படு கின்றதும்
எங்கும்பசுக்கள் மேய்தற் கிடமற்றுப் போனதும்
எளியவர் வழக்கிழந் திடுவதும் முதலாக. (இங்கி)

## உடன் தொடுப்பு

சப்பாத்திக் கள்ளிக்கும் தரிசுக்கும் தீருவை
தடையறக் கொடுத்திடத் தண்டங்கள் செய்வதும்
மெய்ப் பார்ப்பார் வீட்டினிற் பிறந்த பிள்ளைகளும்
வேதங்கள் படியாமல் வேலைகேட் டலைவதும்
துப்பாக்கி எனும்திருட் டாயுதம் வாள்முதற்
சொல்லும்நல் ஆயுதத் தொகைகளை வெல்வதும்
பொய்ப்பாட்டுக் கவிஞர்க்குப் புகழ்ச்சியும் மெய்ப்பாடற்
புலவருக் கிகழ்ச்சியும் பொலிவதும் போலுள்ள (இங்கி)

உயிர்ப்பசுத் தோல்உரிக் கின்ற பொல்லாரையும்
ஒறுத்திடத் தக்கவன் ஒருவன் இல்லாமையும்
மயிர்க்கும் மலத்தினுக்கும் எலும்பிற்கும் விலையீந்து
வாங்குகின் றோர்பெரு வாழ்வடைந் திடுவதும்
செயிர்க்கு வித்தாகிய கள்ளும் சாராயமும்
தேனுக்கும் மேலாய சிறப்புற்று விளங்கலும்
பயிர்த்தொழில் செய்வோர்க்கும் மேலான லாபங்கள்
பாவி வக்கீல்களே படைப்பதும் ஆதியாம் (இங்கி)

## முடிப்பு

பசுவைத் தெய்வமென் றோதும் சதுர்வேத சாரத்தின்
பயன்களெல்லாம் வெறும் பாழேபோல் மறைந்ததும்
கொசுக்கொத்த சில்லரைத் தேவதைகளை நம்பிக்
கொண்டாடு கின்றவர் குதுகுல மலிந்ததும்
அசுவத் தாமன் அநுமார் முதலோர் பெற்ற
ஆண்மைகள் எல்லாமும் அவமாகிப் போனதும்
சிசுவிற் கொப்பாகவே சிற்றெறும்பையு மெண்ணும்
திருப்புகழ் உடையவர் தியக்கமும் காட்டிடும்

இங்கிலீக்காரர் அநியாயக் கொடுமையை
என்னென்று சொல்வேன் அம்மா!

---

அச்சிட்டோர் : வீரபத்திரர் அச்சகம் சென்னை - 600 005.

